ௐ

ஸ்ரீ வாஸுதேவாய நம:

ஸ்ரீஸ்ரீ உத்திராதிமடத்து ஸ்ரீபாதங்களின
சன்னிதானத்தில் மதராஸ் உத்திராதி
மடத்தில் "வேதாந்த விமர்சினீ"
சபையில் புத்தஜயந்தி தினத்தில்
வீரசோளபுரம் கிருஷ்ணா
சாரியரால் செய்யப்பட்ட

# உபன்யாஸச்சுருக்கம்.



[redacted]ான் பண்டித சிரோமணி

சோளபுரம்

ணாசாரியரால்

சுரிக்கப்பட்டது.

மதராஸ்

1931.

# அட்டவணை.

ஸ்ரீ

# ஸ்ரீ வாசுதேவரின் புத்தாவதாரசரிதம்.

"த்வௌ பூதசர்கௌ லோகேஸ்மின் தைவ ஆசுரயேவச" என்று கீதையில் (16-6-ல்) சொல்லியவாறு ஆசுரசம்பத்தை யுடைய ஜனங்கள் ஸஜ்ஜனங்களுடைய ஸஹவாசத்தினால் வேதத்தை பிரமாணமென்று தெரிந்துக்கொண்டு அவைகளில் சொல்லப்பட்டுள்ள (பரப்பிரம்ம) விஷ்ணுவே சர்வோத்தமன், ஜீவஜடாத்மகமான பிரபஞ்சத்தைக் காட்டிலும் வேறுபட்டவன், சகலகுண பூர்ணன், பிராம்ஹணதிவர்ணங்கள் முதலான ஜகத்து சத்தியம், பரப்பிரம்மம் சர்வகர்த்தா என்கிற ஞானமே மோக்ஷ சாதனம், பிரம்மத்தை அடைந்து வைகுண்டாதி ஸ்தான விசேஷங்களிலிருந்து அவாளவாளுக்கு யோக்யமான ஸ்வரூபானந்தத்தை அனுபவிப்பதே மோக்ஷம் என்கிற நிச்சயமுள்ளவராய் வேதாதிகளில் சொல்லப்பட்ட ஸமீசீனமான ஆசரணைகளைச் செய்துகொண்டிருக்க "ஏதமானத்விட்" என்கிற பிருதை பெற்றிருக்கும் வாசுதேவன் புத்தரூபனாய் அவதரித்து "ஞானமொன்றே பாரமார்த்திகமானது, அந்த ஞானத்திலேயே ஞாத்ருஜ்ஞேயாதி சமஸ்த பிரபஞ்சமும் கல்பிதமானது, ஞானாதிரிக்தமாய் பாஹ்யபிரபஞ்சமே இல்லை" என்னும், "சூன்யமொன்றே தத்வம், சூன்யத்தில் சமஸ்த பிரபஞ்சமும் கல்பிதமானது, அஹம் சூன்யம் அஹம் சூன்யம் என்ற உபாசனையினால் ஜீவன் சூன்யபாவத்தை அடைவதே மோக்ஷ" மென்னும் வேதவிருத்தமான இரண்டு மதங்களையும் உபதேசம் செய்து தங்களுடைய யோக்கியதையை மீரிப்போகிற அசுரசம்பத்துள்ள ஜனங்களை அதோகதியை அடையும்படி செய்திருக்கிறார்.

அப்படியிருந்தும் காலாந்தரத்தில் ஆசுரசம்பத்துள்ள மற்றும் சில ஜனங்கள் வேதத்தில் பிராமாண்யபுத்தியை வைத்துக்கொண்டு, புத்தமதமானது வைதிகமல்லாமலிருந்ததினால்

அம்மதத்தை அங்கீகரிக்காமல் வேதத்தில் சொல்லப்பட்டுள்ள பூர்வோக்தமான தத்வங்களை தெரிந்துக்கொண்டு அந்த வேதோக்தமான கர்மங்களை ஆசரித்துக்கொண்டுவரவே, அவர்களின் மோகனார்த்தமாய் "த்வம் ச ருத்ர மஹாபாஹோ மோக சாஸ்திராணி காரய" என்கிற பகவானுடைய உத்திரவை அடைந்த ருத்திரரின் ஆவிஷ்டாவதாரரான சங்கராசார்யர் வேதம் பிரமாணமானது என்கிற நிச்சயமுள்ள அசுரசம்பத்துள்ள ஜனங்களுக்கு வேதம் அப்பிரமாணமென்று சொல்லி "விஞ்ஞானமொன்றே தத்வம், ஜகத்து கல்பிதம், சூன்யமொன்றே தத்வம், சூன்யத்தில் எல்லா ஜகத்தும் கல்பிதம் என்கிறமதங்களே யதார்த்தமானவை என்று ஸ்தாபிப்பது இக்காலத்தில் அசாத்தியம், அதில் ஜனங்களுக்கு நம்பிக்கை உண்டாகமாட்டாது" என்று நினைத்து வேதத்தில் பிராமாண்ய புத்தியுள்ள ஆசுரசம்பத்துள்ள ஜனங்களுக்கு "வேதாதிகளிலேயே இப்பௌத்த தத்வங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. விஞ்ஞானதத்வமே நிஜம், ஜகத்து கல்பிதம், சூன்யமொன்றே தத்வம், சூன்யத்தில் எல்லாஜகத்தும் கல்பிதம். என்கிற மதங்களும் வைதிகமதமே, ஆகையால் நீங்கள் எல்லோரும். இம்மதத்தையே ஆஸ்ரயித்து நிர்விசேஷ சூன்யரூபமான பிரம்மபாவத்தையாவது, நிர்விசேஷ விஞ்ஞானரூப பிரம்ம பாவத்தையாவது அடையவேண்டியதென்று * வேத சூத்திருதிவாக்யங்களுக்கு அபார்த்தங்களைச்செய்து, பிரச்சன்ன அஸத்பௌத்த மதமான மாயாவாதமென்கிற சாஸ்திரத்தை பிராம்மணரூபத்தினால் கலியுகத்தில் நானே சொல்லியிருக்கிறேன்" என்று பத்ம புராணத்தில் சொல்லியிருக்கிறபடிக்கு கிரந்தங்களை இயற்றி ஸ்வபாவத்தினால் ஆசுரஸம்பத்துள்ள ஜனங்களுக்கு உபதேசம் செய்து அவர்களை வேதத்தின் யதாவஸ்திதமான தத்வார்த்தத்தினின்றும் விலக்கி அதோகதியை அடையும்படி செய்திருக்கிறார்.

---

* मायावादमसच्छास्त्रं प्रच्छन्नं बौद्धमुच्यते ।
मयैव कथितं देवि कलौ ब्राह्मणरूपिणा ॥
अपार्थं श्रुतिवाक्यानां दर्शयन् लोकगर्हितम् । (पद्मपुराण॰)

இந்தப்படிக்கு கிரந்தங்களைச்செய்திருப்பதினால் தைவசம்பத்துள்ள வைதிக ஆஸ்திக ஜனங்கள் நம்முடைய இந்த உபதேசங்களினால் கெட்டுப்போவார்கள். அப்படி அவர்கள் கெடக்கூடாது என்று கருணையினால் புத்ததேவர் விசாரசீலரான ஜனங்களுக்கு வேதோக்தமான நிஜதத்வங்களை அறிவிப்பதர்க்காக "பரித்ராணாய ஸாதூனாம்" என்று கீதை 4-8 ல் சொல்லியுள்ளபடிக்கு வேதவியாச ரூபத்தினால் பிரம்மசூத்திரம் கீதை இவைகளைச் செய்தார், "நாபாவ உபலப்தே:" முதலிய சூத்திரங்களினால் சூன்யமே தத்வம், விஞ்ஞானமேதத்வம் இந்த எல்லா ஜகத்தும் மித்யை என்னும் இரண்டுவிதமான பௌத்த மதங்களை கண்டித்து, ஸஜ்ஜனங்கள் கெடாமலிருக்கும்படி செய்திருக்கிறாரே, அப்படியே ருத்ராவிஷ்டாவதாரரான சங்கராசார்யரும் நாங்கள் விஞ்ஞானவாதிதத்வங்களையும், சூன்யவாதித்தவங்களையும் வைதிகதத்வங்களென்று வேதபாஹ்யரான ஆசுரசம்பத்தையுடைய ஜனங்களின் வஞ்சனார்த்தமாக உபதேசித்ததினால் வைதிகராய் ஆஸ்திகரான தைவீசம்பத்துள்ள ஜனங்களும் இந்த பௌத்த தத்வமான அத்வைத தத்வங்களே வைதிகதத்வங்களென்று தெரிந்துக்கொண்டு கெட்டுப்போவார்கள் (அதோகதியை அடைவார்கள்) அப்படிக்கூடாது என்று கருணையினால் பிரம்மரூபமான ஞானத்தைவிட வேறான பாஹ்ய பிரபஞ்சமே இல்லை ஞானத்திலேயே சமஸ்த பிரபஞ்சமும் கல்பிதமானது; பிரம்மரூபமான சூன்யத்தைவிட வேறானபிரபஞ்சமே இல்லை, எல்லாம் சூன்யத்தில் கல்பிதமானது என்கிற நம்மால் போதிக்கப்பட்ட மதத்தின் தத்வங்கள் பிரமாணவிருத்தமானது, அங்கீகரிக்கத்தக்கவைகளல்ல" என்கிற பிரமேயத்தை சூக்ஷ்மபுத்தியுள்ள (விசாரசீலரான) தைவீசம்பத்துள்ள ஜனங்களுக்கு தெரியும்பொருட்டு பௌத்தமதநிருகரணம் செய்வதற்காக வியாசரூபத்தினால் செய்யப்பட்ட "(1) நாபாவ உபலப்தே:, (2) வைதர்ம்யாச்ச ந ஸ்வப்னாதிவத், (3) ந பாவோனுபலப்தே:, (4) க்ஷணிகத்வாச்ச, (5) சர்வதானுபபத்தேஸ்ச" என்கிற பிரம்மசூத்திரம் 2-2-28 முதல் 32-வரையிலுள்ள சூத்திரங்களின் வியாக்யானங்களில் விஞ்ஞானாதிரிக்தமான பாஹ்யப் பிரபஞ்சமே

கிடையாது, சூன்யாதிரிக்தமான பாஹ்ய பிரபஞ்சமே கிடையாது என்கிற அத்வைதமதமாகிய பௌத்தமதத்தை நிருகரித்திருக்கிறார்.

ஆகையால் வாசுதேவாவதாரரான புத்ததேவரும், ருத்ராவிஷ்டாவதாரரான சங்கராசார்யரும் "தைவீ சம்பத்விமோக்ஷாய நிபந்தாயாஸுரீமதா" என்று கீதையில் சொல்லியவாறு, ஆசுர சம்பத்துடைய ஜனங்கள் அதோகதியை அடையும் சாதனங்களை உபதேசம் செய்திருந்தபோதிலும், தைவீசம்பத்துடைய வைதிகஜனங்களுக்கு நித்யானந்தானுபவரூபமான மோக்ஷத்தை அடைவதற்கு பாதக மில்லாமல் செய்திருக்கிறார். ஆகையால் எல்லோரும், இவ்விருவர்களின் விஷயத்தில் நன்றியறிவைப் பாராட்டி, அவர் ஆஸுரசம்பத்துள்ள ஜனங்களின் மோகனார்த்தமாக "பிரம்மமென்று சொல்லப்படுகிற விஞ்ஞானதத்வமே நிஜமானது, அந்த விஞ்ஞானத்தைவிட வேறான சகல பாஹ்ய பிரபஞ்சமும் கல்பிதமானது, மித்யா (பொய்) பிரம்மமென்று சொல்லிக்கொள்ளப்படும் சூன்யமே தத்வம், அந்த சூன்யத்திலேயே சமஸ்த ஜகத்தும் கல்பிதமானது" (மித்யா) என்று சொல்லப்பட்ட தத்வங்களை தெரிந்துக்கொள்ளாமல், விஷ்ணுவே சர்வோத்தமன், இஜ்ஜீவஜடாத்மகமான பிரபஞ்சத்தைவிட வேறானவன், பிராம்மணாதி வர்ணங்கள், ஆச்சிரமங்கள், யஞ்ஞ தீர்த்த வேத தேவதைகள், ஸ்னான சந்தியாவந்தனம் முதலான எல்லா ஜகத்தும் சத்தியமானது என்கிற இது முதலான, வேதத்திர்க்கு முக்யதாத்பர்ய விஷயமான தத்வங்களே வைதிகமானது என்று தெரிந்துக்கொண்டு சமஸ்த ஆஸ்திகரான தைவீசம்பத்துடைய ஸஜ்ஜனங்கள் அந்தப்பிரகாரமே நடந்துக் கொண்டு, பகவதனுக்கிரகத்தை அடையவேண்டியது ஆவசியகமானது.

---

# ஸ்ரீ வாசுதேவாவதாரரான புத்தர் சொன்ன தத்வமும், ருத்ராவிஷ்டரான சங்கரா சாரியார் சொன்னதத்வமும் ஒன் றே என்பதில் ஆதாரம்.

---

(1) பாஹ்யார்த்தங்களை ஸ்வீகரிக்கும் வைபாஷிக ஸௌத் ராந்திக மதம், (2) விஞ்ஞானமொன்றேதத்வம், அதிலேயே ஞாத் ரு ஞேயாதி பிரபஞ்சம் கல்பிக்கப்பட்டதென்று பாஹ்யார்த்த (ஞானத்தைத் தவிர வேறு பதார்த்த) ங்களை நிருகரிக்கும் விஞ் ஞானவாதிமதம், (3) சூன்யமொன்றே தத்வம், அந்த சூன்யத்தி லேயே ஞாத்ருஞேயாதி பிரபஞ்சம் கல்பிதமென்று சொல்லும் சூன்யவாதிமதம், இவ்வாறு பௌத்தமதம் மூன்று விதமா யிருக்கிறது இவைகளில், விஞ்ஞானவாதிகளின் மதமும், சூன்ய வாதிகளின் மதமும், சங்கராசார்யரால் பிரசுரிக்கப்பட்ட மத மாகவே இருக்கின்றன.

ஏனெனில் சங்கராசாரியர் தம்மால் பிரசாரிக்கப்பட்ட மதத்தில் விஞ்ஞான பிரம்மத்தினிடத்தில் ஞாத்ரு ஞேயாதி சமஸ்த பிரபஞ்சமும் கல்பிதமானதென்று சொல்லிக்கொண்டே விஞ்ஞானமொன்றே தத்வம், விஞ்ஞானதிரிக்தங்களான பாஹ் யார்த்தங்களில்லை யென்று விஞ்ஞானவாதிகளான பௌத்தர் களைப்போல் பாஹ்யார்த்தங்களை நிருகரிக்கிறார்.

மற்றும் சூன்யரூபபிரம்மத்தினிடத்தில் ஞாத்ருஞேயாதி சமஸ்தபிரபஞ்சமும் கல்பிதமென்று சொல்லிக்கொண்டே சூன்யரூபமான பிரம்மமொன்றே தத்வம், சூன்யரூபபிரம்மா திரிக்தமான பதார்த்தமே இல்லை என்று நிருகரிக்கிறார். ஆகை யால் சங்கராசார்யரின் அத்வைத மதம், விஞ்ஞானமேதத்வ மென்று சொல்லும் விஞ்ஞானவாதி மதத்துடனும், சூன்யமே தத்வமென்று சொல்லும் சூன்யவாதிமதத்துடனும் சமமே ஆகி றது.

இந்த அத்வைதமதத்தில் பிரம்ம=விஞ்ஞானமே தத்வம், ஞாத்ருஞேயாதி சமஸ்த பாஹ்ய ப்ரபஞ்சமும் கல்பிதமானதென்று சொல்லப்படுகிறதென்பது:—

சங்கராசார்யருடைய பரமகுருவான கௌடபாதாசார்யரின் கிரந்தம், அதற்கு வ்யாக்யானமான சாங்கரபாஷ்யம், அதற்கு வ்யாக்யானமான ஆனந்தகிரீயம், சங்கரவிஜயம் முதலான கிரந்தங்களினால் சித்திக்கிறது.

* ஞானமொன்றே பாரமார்த்திகமானது. அந்த ஞானத்திலேயே ஞாத்ரு ஞேயாதிப்ரபஞ்சம் கல்பிதம் என்ற ஸௌகத (பௌத்த) மதமே உங்களால் (கௌடபாதரால்) ஸ்வீகரிக்கப்பட்டிருக்கிறதென்கிற ஆக்ஷேபணை வரவே, "1 ஞானமொன்றே சத்தியம், அந்த ஞானத்தில் ஞாத்ரு ஞேயாதி பிரபஞ்சம் கல்பிதமானது, பாஹ்யார்த்தங்களில்லவேயில்லை என்று பௌத்தரைப்போல் நாமும் ஒப்புக்கொண்டிருக்கிறோம். ஆனாலும், "2 நாங்கள் சொல்லும் ஞானம் உபநிஷத்துக்களால் தெரிந்துகொள்ள யோக்யமானது, சகல பேதரகிதமானது, நித்யமானது, பௌத்தர் சொல்லும் விஞ்ஞானம் இத்தகையதல்ல" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

---

* ज्ञानमात्रं पारमार्थिकं तत्रैव ज्ञातृज्ञेयादिकल्पितमिति सौगतमतमेव भवताऽपि संगृहीतमिति (आ. गौ. अ. ९९)

1 यद्यपि बाह्यार्थनिराकरणं ज्ञानमात्रकल्पनाचाद्वयवस्तुसामीप्यमुक्तं, ज्ञानज्ञेयज्ञातृभेदरहितं परमार्थतत्वं अद्वयमेतन्न बुद्धेन भाषितम् ।

2 इदं तु परमार्थतत्वमद्वैतं वेदांतेष्वेवविज्ञेयमित्यर्थः ।
ज्ञानं नैतद्बुद्धेन भाषितं (गौ. का. अ. शां. प्र. ९९.)

सकलभेदविकलं परिपूर्णमनादिनिधनं ज्ञप्तिमात्रमुपनिषदेक समधिगम्यं तत्वमिह प्रतिपाद्यते । मतांतरे तु नैवमिति कुतो मतसांकर्यशंकावकाशमासादयेत् (आनं.)

1. சங்கராசாரியார் ஓர் தேவாலயத்தில் பிறவேசிக்கும்பொழுது அந்த ஆலயவாசலிலிருந்த காவர்க்காரன் அவரைப் பார்த்து "நீர் பௌத்தமதஸ்தரானதால் இந்த ஆலயத்தில் பிரவேசிக்கப்படா" தென்று தடுக்கவே சங்கராசாரியார் 'நான் பௌத்தமதஸ்தனல்ல' வென்று பதில் சொன்னூர். அதற்கு காவலாள் "உங்கள் மதத்திற்கும் பௌத்தமதத்திற்கும் என்ன வித்யாசம் சொல்லுங்க" ளென்று கேட்க அதற்கு சங்கராசாரியார் "விஞ்ஞான வாதிகள் விஞ்ஞானத்தை க்ஷணிகமென்று சொல்லுகிறூர்கள், நாங்கள் விஞ்ஞானத்தை நித்தியமென்று சொல்லுகிறோம்" என்று பௌத்தமதத்திற்கும் தம்மதத்திற்கும் வித்யாசம் சொல்லியிருக்கிறூர் என்று தெரிவிக்கிற சங்கரவிஜயகாவ்யத்திறுைம், விஞ்ஞானமே தத்வம், சகல ப்ரபஞ்சமும் அதில் கல்பிதமென்கிற பௌத்தமததத்வமே அத்வைதமததத்வமென்று தெரியவருகிறது.

(2) சுவப்ன ஜாக்ரங்களில் பிரஞ்ஞானத்தினின்றும் வேறுய் எந்தவஸ்துவிசேஷமும் காணப்படுவதில்லை. ஆகையால் பிரஞ்ஞானத்தைக்காட்டிலும் வேறுக அவைகள் இல்லை என்று சொல்லுவதே யுக்தமானது. (பிரஹ - சங்கரபாஷ்யம் 2-4-7.)

(3) ஆத்மத்தினின்றும் வேறுகக்காண்கிறதில்லையாகையால் எல்லாம் ஆத்மரூபமே (பிரஹ-ச. பாஷ்யம். 2-4-6.)

(4,5.) பரபிரம்மம் காரணம். காரணமான அந்தப்ரம்மத்தினின்றும் வேறுன கார்யபூதபிறபஞ்சம் இல்லை என்பது காணப்படுகிறது (பிரம்மசூத்ரபாஷ்யம் 2-1-4.)

---

1. **विज्ञानवादस्य च किं विभेदकं भवन्मताद्ब्रूहि ततः परं व्रज॥ १५-७४॥**
**विज्ञानवादी क्षणिकत्वमेषामङ्गीचकारेति महान्विशेषः ॥ १५-७५ ॥**
**(शं. वि.)**

2. **तथाप्रज्ञानव्यतिकेण स्वप्नजागरितयोर्न कश्चिद्विशेषो गृह्यते । तस्मात् प्रज्ञानव्यतिरेकेणाभावो युक्तस्तेषां (बृ. शां. भा. २ । ४ । ७.)**

3. **आत्मव्यतिरेकेणाग्रहणादात्मैव सर्वं (बृ. शां. भा. २ । ४ । ५.)**

4. **कारणं परंब्रह्म तस्मात्कारणात्......व्यतिरेकेणाभावः कार्यस्यात्र गम्यते (ब्र. सू. शां. भा. २ । १ । ४ ।)** [२-१-१४.

5. **ब्रह्मव्यतिरेकेण कार्यजातस्याभाव इति गम्यते (ब्र. सू. शां. भा.)**

இவை முதலான அநேக சங்கராசார்யருடையவும், மற்றும் அவரையனுசரித்தவரான அத்வைதிகளின் வாக்யங்களினாலும் பௌத்தரைப்போல் விஞ்ஞானத்தினின்றும் பின்னமாக பாஹ்யப்ரபஞ்சமே இல்லை என்பது அத்வைதமதம் என்று ஸ்பஷ்டமாய் தெரியவருகிறது.

ஆனால் மேற்சொல்லிய சில கிரந்தங்களில் "விஞ்ஞானமொன்றே தத்வம், பாஹ்ய ஜகத்து அதில் கல்பிதமானது" என்கிற விஷயத்தில் அத்வைதமதமும், பௌத்தமதமும் ஒன்றேயாயினும் அத்வைதிகளின் விஞ்ஞான தத்வம் நித்யமானது, பௌத்தரின் விஞ்ஞானதத்வம் க்ஷணிகமானது என்கிற விசேஷம் உண்டென்று காட்டியிருக்கிறார்கள். இந்த ஸ்வல்பமான பேதமிருப்பதினாலேயே அத்வைத விஞ்ஞானவாதம் வைதிகமாகமாட்டாது. இவ்விசேஷத்தைச்சொல்லுவதற்காக, சங்கராசாரியர் அனேக கிரந்தங்களைச்செய்யவேண்டுமோ? இதற்கு அநந்த வேதங்கள், சூத்திரங்கள் கீதை இவைகள் பிரவர்த்திக்கவேண்டுமா! இவ்விசேஷத்தினால் அத்வைதிகளுக்கு என்ன சித்திக்கும் என்பது விசாரிக்கத்தக்கதாய் இருக்கிறது. தவிர இச்சிறுவிசேஷமும் வாஸ்தவமுமல்ல. பௌத்தர்களிலும் நித்ய விஞ்ஞான வாதிகளிருக்கிறார்கள். இந்த விஞ்ஞானவாதமும் அத்வைதவிஞ்ஞானவாதமும் ஒன்றே என்பதற்கு ஆக்ஷேபமே இல்லை.

அத்வைத விஞ்ஞானம், பௌத்த விஞ்ஞானம் இவ்விரண்டும் நிர்விசேஷ (எந்த தர்மங்களாலும் ரஹித) மானதாலும், பேதரஹிதமானதாலும், க்ஷணிகத்வதர்மமாகிலும், நித்யத்வதர்மமாகிலும் இரண்டும், இவ்விரண்டு விஞ்ஞான தத்வங்களில் இல்லாதிருப்பதினாலும், இவ்விருவருடைய விஞ்ஞானங்களுக்கும் பேதமிருக்கிறதென்று சொல்லுகிறதற்கு சாத்யமில்லை. அத்வைதிகளால் அங்கீகரிக்கப்பட்ட பிரம்மமானது நிர்தர்மகமாகவும் அவாச்யமாகவும் அஞ்ஞேயமாகவும் இருப்பதால் உபனிஷித்கம்யமென்று சொல்வது சரியல்ல. அதினால் விஞ்ஞானபேதம் சித்திக்கிறதென்று சொல்வது சரியல்ல.

# சூன்யவாதிமதமும் அத்வைதமதமே என்பதற்கு ஆதாரங்கள்.

"க்ஷணிகத்வாச்ச" என்கிற ஸூத்திரபாஷ்யத்தில், (1)"சூன்ய வாதியின் பக்ஷம் சர்வப்ரமாணவிருத்தமானதினுல் அதை நிரு கரிப்பதற்கு ஸூத்திரகாரர் ஆதரவு செய்யவில்லை" என்று சங்கரா சார் சொன்னதற்கு, பிரம்மவித்யாபரணகாரர் வ்யாக்யானம் செய்யுங்காலத்தில் 2 "சூன்ய பதத்தினுல் சர்வ ப்ரபஞ்சாதீத மான, பாவரூபமானதத்வமென்று விவக்ஷித்தால் எங்களுடைய (அத்வைதிகளுடைய) பிரம்மவாதமே பௌத்தரால் ஆச்ரயிக் கப்பட்டது. பௌத்தரின் சூன்யவாதம் நம்மிட பிரம்மவாதமே வேறு சப்தத்தினுல் சொல்லப்பட்டது. சூன்யபதத்தினுல் ப்ரபஞ்சாபாவமே தத்வமென்று சொன்னுல் ப்ரபஞ்சம் சர்வ ப்ரமாணங்களினுல், சித்திக்கிறபடியால் பிரபஞ்சாபாவரூபமே தத்வமென்று நிரூபணம் செய்ய சாத்யமில்லை என்கிற தூஷணம் ஸ்பஷ்டமாய்தெரிவதால் சூனியமதம் நிருகரணம் செய்வதற்கு ஸூத்திரம் செய்யவில்லை. இப்படி சொல்லியிருக்கிறபடியால் சூன்யவாதமே அத்வைதபிரம்மவாதம் என்று அத்வைதிகளே ஒப்புக்கொண்டிருக்கிறபடியால் சூன்யமதமே அத்வைதமதம். அத்வைதமதத்தில் (3) பிரம்மம் பிரபஞ்சாபாவரூபமென்று அத்வைதசித்தி முதலான கிரந்தங்களில் சொல்லப்பட்டிருப்ப

---

1. * शून्यवादिपक्षस्तु सर्वप्रमाणविप्रतिषिद्ध इति तन्निराकरणाय नादरः क्रियते (शां. भा. )

2. शून्यपदेन सर्वप्रपञ्चातीतं भावरूपं किंचित्तत्वं विवक्षितं उताभावरूपं नाद्यः - तथासति वाचोयुक्त्यंतरेण ब्रह्मवादएवाश्रितः । यदि-द्वितीयःपक्षः - तदा सर्वप्रमाणविरोधः। सर्वप्रमाणैः प्रपञ्च उपलभ्यमाने तदभाव एव तत्वमिति निरूपयितुमशक्यमिति दूषणस्य स्फुटतया तन्निराकरणाय न सूत्रकृता सूत्राण्यारचितानि. (ब्रह्मविद्याभरणे 2-2-39.)

3. प्रपञ्चनिषेधाधिकरणीभूत ब्रह्माभिन्नत्वान्निषेधस्य तात्विकत्वेपि नाद्वैतहानिः (अ० सि० परि० १. द्वितीयमिथ्यात्वोपपत्तौ ९६.)

தால் சூன்யம் அபாவஸ்வரூபமாயினும் பிரபஞ்சாபாவஸ்வரூப பிரம்மத்திற்கு பிரபஞ்சாபாவஸ்வரூப சூன்யத்தினின்றும் பேதம் ஏற்படுவதில்லை. சூன்யம் நிர்விசேஷமானது. அத்வைத மதத்தின் பிரம்மமும் நிர்விசேஷமானது. ஆகையால் இரண்டிற்கும் பேதமே ஏற்படாது.

---

Thus it does not seem so passing strange that there should be striking similarities between Buddhism and Sankara seeing that the sources of their thought lie so near together.......But in view of all this what are we to say of the vehement opposition to Buddhism which we find in Sankara's own writings and particularly in the second section of the second chapter of his Commentary on the Vedanta Sutras ?......His language is that of the full-blooded controversialist rather than of the abstractly intellectual reasoner.

W. S. URQUHART, M.A., D. LITT.

---

"இவ்விதமாக சங்கர மதத்திற்கும் பௌத்தமதத்திற்கும் ஸ்பஷ்டமான சாதிருஸ்யங்களிருப்பது அவ்வளவு ஆச்சிரியமல்ல. ஏனென்றால் இரண்டு மதங்களுடைய மூலங்களுக்கு மிகவும் சாமீப்யமிருக்கிறது. இப்படி இருந்தபோதிலும் சங்கராசாரியார் தம்முடைய கிறந்தகங்களில், அதிலும் பிரம்மசூத்திர பாஷ்யம் இரண்டாவது அத்தியாயம் இரண்டாவது பாதத்தில் மிகவும் க்ரூரமாக பௌத்தவாதத்தை கண்டித்திருப்பதைப் பார்த்து நாம் என்ன சொல்லுவது ! இங்கு சங்கராசாரியார் வாக்யங்கள் (பாஷணைகள்) கொழுத்த வாதியின் வார்த்தைகள்போல் இருக்கிறதேயொழிய அபிமானமற்ற தத்வஜிஞ்ஞாஸுவின் வார்த்தையல்ல" என்று W. S. Urquhart, M.A., D. LITT. என்பவர் அபிப்பிராயப்படுகிறார்.

---

PRINTED AT THE ANANDA PRESS, LOANE SQUARE, MADRAS.

## அத்வைதமத தத்வங்களையே பௌத்தமத தத்வங்களின் நிருகரண வியாஜத்தினால் அத்வைதிகள் தாமே நிருகரணம் செய்துக்கொண்டது.

விஞ்ஞானவாதிகள் விஞ்ஞானாதிரிக்தமான பாஹ்ய பிரபஞ்சமே இல்லை, ஞாத்ருஞேயாதி சகல பிரபஞ்சமும் விஞ்ஞானத்தில் கல்பிதமானது, என்று சொல்லவே மூன்று விகல்பங்களைச்செய்து கொண்டு சங்கராசாரியர் பாஹ்யப்பிரபஞ்சமில்லை என்பதை நிருகரணம் செய்கிறார்.

(1) பிரபஞ்சவிஷயமான உபலப்தி இல்லாமலிருப்பதினால் பிரபஞ்சத்தை நிஷேதிக்கிறோம் என்கிறது சரியல்ல. "நாபாவ உபலப்தேஃ" ஜகத் காணப்படுகிறதினால் இல்லை என்று சொல்லக் கூடாது.

(2) கட பட குட்ய (சுவர்) ஸ்தம்ப, கும்பமென்று பாஹ்ய பதார்த்தங்கள் உபலப்தமாகின்றன. பதார்த்தங்கள் காணப்

---

१. नखल्वभावो बाह्यार्थस्याध्यवसातुं शक्यते । सह्युपलंभाभावाद्वाध्यवसीयते सत्यप्युपलंभे तस्य बाह्याविषयत्वाद्वा सत्यपि बाह्यविषयत्वे बाह्यार्थबाधकप्रमाण सद्भावाद्वा (ब्र० सू० शांभा. भामती॰। २ । २ । २८)

२. (नाभाव उपलब्धेः २। २। २८) नखल्वभावो बाह्यार्थस्याध्यवसातुं शक्यते । कस्मात् उपलब्धेः उपलभ्यते हि प्रतिप्रत्ययं बाह्योऽर्थःस्तंभऽकुड्यं घटः पट इति । नचोपलभ्यमानस्यैवाभावो भवितुमर्हति। यथा हि कश्चिद्भुंजानो भुजिसाध्यायां तृप्तौ स्वयमनुभूयमानायामेवं ब्रूयान्नाहं भुंजे न वा तृप्यामीति तद्वदिंद्रियसन्निकर्षेण स्वयमुपलभमान एव बाह्यमर्थं नाहमुपलभे न च सोऽस्तीति ब्रुवन्नुपादेयवचनः स्यात् (शां. भा.)

பட்டுக்கொண்டிருக்க அவைகளின் அபாவம் கூடுவதில்லை. ஒருவன் போஜனம் செய்து, அதினுலுண்டான திருப்தியை அனுபவித்துக்கொண்டிருந்து, நான் போஜனமே செய்யவில்லை, திருப்தனுமாகவில்லை என்று சொல்லும் வார்த்தை எப்படி ஸ்வீகரிப்பதற்கு யோக்யமல்லவோ அப்படியே இந்திரிய சன்னிகர்ஷத்தினுல் பாஹ்யப்பிரபஞ்சத்தைப் பார்த்துக்கொண்டிருந்தும், நான் பாஹ்யப்பிரபஞ்சத்தைப் பார்க்கவில்லை, பாஹ்யப்பிரபஞ்சமே இல்லை என்று சொல்லும் விஞ்ஞானவாதிகளின் வார்த்தை ஸ்வீகரிப்பதற்கு யோக்யமானதல்லவென்று சங்கராசாரியார் கண்டித்திருக்கிறார்.

(1) எந்தப் பிரபஞ்சமும் காணப்படுவதில்லை என்று நாங்கள் சொல்லுவதில்லை, மற்றென்னவென்றுல் ஞானத்தைவிட வேருகக் காணப்படுகிறதில்லை என்று சொல்லுகிறேம் என்கிற பௌத்தருடைய இரண்டாவது ஆக்ஷேபணையை நிராகரிக்கிறார். உன்னுடைய வாய்க்கு அங்குசம் (வாய்பூட்டு) இல்லாததினுல் இந்தப்படிக்குச் சொல்லுகிறாய். ஆயினும் அவ்வார்த்தைகள் யுக்தியுக்தமல்ல. யுக்தி விருத்தங்களாயிருக்கின்றன. யாவரும் உபலப்தியையே கட, பட, குட்யங்களென்று அறிந்துகொள்வதில்லை. உபலப்திக்கு கட படாதிகள் விஷயங்களென்றே தெரிந்து கொள்ளுகிறார்கள். இப்படி கடாதி பதார்த்தங்கள் ஞானத்தினின்றும் வேருக காணப்பட்டுக்கொண்டிருக்க ஞானவ்யதிரிக்தமான பதார்த்தமே இல்லை என்று சொல்லுவது சரியல்ல.

---

१. नाहमेवं ब्रवीमि न कंचिदर्थमुपलभ इति। किंतु उपलब्धिव्यतिरिक्तं नोपलभ इति ब्रवीमि। बाढमेवं ब्रवीषि निरंकुशत्वात्ते तुण्डस्य न तु युक्त्युपेतं ब्रवीषि। यतउपलब्धिव्यतिरेकोऽपि बलादर्थस्याभ्युपगंतव्यः। उपलब्धेरेव। न हि कश्चिदुपलब्धिमेव स्तंभः कुड्यं चेत्युपलभते उपलब्धिविषयत्वेनैवतु स्तंभकुड्यादीन् सर्वे लौकिकाः उपलभन्ते (ब्र. सू. शां. भा. २। २। २८.)

(1) "சுவாப்னஞானம் (அறிவு) பாஹ்யார்த்தங்களில்லாமலே எப்படி உண்டாகுமோ அப்படியே ஜாக்ரத்காலத்தின் உபலப்தியும் (அறிவும்) பாஹ்ய பதார்த்தமில்லாமலே உண்டாகக்கூடும். ஏனென்றால் இரண்டும் பிரத்தியயமானதினால்" என்கிற பௌத்தனிட ஆக்ஷேபத்தை "வைதர்ம்யாச்ச ந சுவப்னாதிவத்," என்கிற சூத்திரத்தை வியாக்யானம் செய்துக் கொண்டே கண்டனம் செய்கிறார்.

"சுவாப்னப்பிரத்யயத்திற்கு (அறிவிற்கு) பாதகமுண்டு, ஜாக்ரத் பிரத்யயத்திற்கு எக்காலத்திலும் பாதகமில்லாததினால், சுவாப்னப்ரத்யயத்தைப்போல், ஜாக்ரத் ப்ரத்யயங்கள் பாஹ்ய பதார்த்தங்களில்லாமல் கூடுவதில்லை." இவை முதலான அநேக தூஷணங்களைச் சொல்லி ஞானாதிரிக்தமாய் பாஹ்ய பதார்த்தம் இல்லையென்று சொல்லும் விஞ்ஞான வாதியான பௌத்தனை நிராகரிக்கும் வியாஜத்தினால் விஞ்ஞானாதிரிக்தமாய் பாஹ்யார்த்தங்களில்லை என்று சொல்லும் தங்கள் அத்வைதமதத்தின்பேரிலும், விஞ்ஞான வாதியின்பேரில் சொல்லிய தூஷணங்கள் வருகின்றனவென்று சூக்ஷ்மபுத்திகளான தைவீசப்பத்தையுடைய ஜனங்களுக்கு சங்கராசாரியார் அறிவித்திருக்கிறார். அப்படியே ஆசுர சம்பத்தையுடைய ஜனங்களுக்கு "எங்கள் சங்கராசாரியார் பௌத்த மதத்தை கண்டித்திருக்கிறார். அத்வைத மதமே பௌத்த மதமாயிருந்தால் எப்படி கண்டிப்பார். ஆகையால் நம்முடைய அத்வைத மதம் பௌத்தமதமல்ல" என்கிற புத்தியையும் உண்டு பண்ணினார்.

---

१. यदुक्तं बाह्यार्थापलापिना स्वप्नादिप्रत्ययवज्जागरितगोचरा अपि स्तंभादिप्रत्ययाः विनैव बाह्येनार्थेन भवेयुः प्रत्ययत्वाविशेषादिति। तत्प्रतिवक्तव्यं। अत्रोच्यते न स्वप्नादिप्रत्ययवज्जाग्रत्प्रत्यया भवितुमर्हन्ति कस्मात् वैधर्म्यात् वैधर्म्यं हि भवति स्वप्नजागरितयोः किंपुनर्वैधर्म्यं बाधाबाधाविति ब्रूमः बाध्यते हि स्वप्नोपलब्धं वस्तु प्रतिबुद्धस्य............................नैवं जागरितोपलब्धं वस्तु स्तंभादिकं कस्यां चिदप्यवस्थायां बाध्यते (ब्र. सू. भा. २। २। ४.)

சூன்யம் பிரபஞ்சாபாவ ரூபமென்கிறது சர்வப்ரமாண விரோதமுள்ளதாகிறபடியால் சரியானதல்ல. சர்வப்ரமாணங்களினால் ஜகத்துகண்டுவர, பிரபஞ்சத்திற்கு அபாவத்தை (இல்லையென்று) சொல்லுவது அசக்யமென்னும் தூஷணம் ஸ்பஷ்டமாகையால் சூத்ரகாரர் அதை தூஷிக்கவில்லை என்று சொல்லியிருக்கிறார். அத்வைத மதத்தில் பிரம்மம் பிரபஞ்சாபாவரூபம் என்று அத்வைதசித்தி முதலிய கிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் பிரபஞ்சாபாவரூப சூன்யவாதியின்பேரில் சொல்லிய தூஷணங்கள் பிரபஞ்சாபாவமான பிரம்மவாதிகளின் பேரிலும் வருகிறதாகையால் தைவீசம்பத்துள்ள ஜனங்களுக்கு பிரபஞ்சாபாவரூப பிரம்மவாதம் அப்ராமாணிகம், ஸ்வீகாரார்ஹமல்ல என்று அறிவித்திருக்கிறார். ஆசுர சம்பத்துள்ள ஜனங்களுக்கு எமது சங்கராசாரியார் பிரபஞ்சாபாவரூப சூன்யவாதத்தைக்கண்டனம் செய்திருக்கிறார். அத்வைதமதம் சூன்யவாதமல்ல என்கிற புத்தியையும் உண்டுபண்ணியிருக்கிறார்.

(1) பிரபஞ்சம் இல்லை என்று சொன்னால் பிரபஞ்சத்திற்கு ஸத்யத்வத்தை (உண்டென்று) க்ரகிக்கும் ப்ரத்யக்ஷாதி ப்ரமாண விரோதம் வருகிறதென்று ஜகத்ஸத்யத்வவாதிகள் சொன்னால் ப்ரத்யக்ஷாதிகள் வ்யாவஹாரிகஸத்யத்வத்தை விஷயீகரிக்கிறது. பிரபஞ்சத்திற்கு பாரமார்த்திகஸத்யத்வத்தை நிஷேதிக்கிறோம். ஆகையால் ப்ரமாணவிரோதமானது அத்வைதிகள் மதத்திற்கு வரு

---

१. यद्युच्येत तात्विकं प्रामाण्यं प्रमाणानामनेनविचारेण व्युदस्यते न सांव्यवहारिकं तथाच भिन्नविषयत्वान्नसर्वप्रमाणप्रतिषेध इत्यत आह। प्रमाणानिहि स्वगोचरे प्रवर्तमानानि तत्वमिदमित्येवप्रवर्तंते अतात्विकत्वंतु तद्गोचरस्यान्यतो बाधकादवगंतव्यं नपुनः सांव्यवहारिकं नः प्रामाण्यं नतु तात्विकमित्येवप्रवर्तन्ते बाधकंत्वातात्विकत्वमेषांतद्गोचरविपरीतप्रत्ययोपदर्शनेनदर्शयेत्। यथाशुक्तिकेयंनरजतं मरीचयो नतोयमेकश्चंद्रोनचंद्रद्वयमित्यादि तद्वदिहापि समस्त प्रमाणगोचर विपरीततत्वांतरव्यवस्थापनेनातात्विकत्वमेषां प्रमाणानां बाधकेन दर्शनीयं नत्वव्यवस्थापित तत्वांतरेण प्रमाणानि शक्यानिबाधितुं (ब्र. सू. शां. भा. भामती २। २। ३२)

கிறதில்லை என்று ஆசுரசம்பத்துள்ள ஜனங்களுக்கு உபதேசித்து ப்ரத்யக்ஷாதி ப்ரமாணவிரோதபரிகாரம் செய்ததைப்போல் காட்டியிருக்கிறார். அதனால் தைவசம்பத்துள்ளஜனங்களும் பிராம்மண வர்ணம் முதலிய எல்லா பிரபஞ்சங்களும் மித்யை (பொய்) என்று அங்கீகரித்தால் பிராம்மணாதி வர்ணங்களுக்கு ஸத்யத்வ க்ராஹகமான ப்ரமாணவிரோதம் வருகிறதில்லை என்று விபரீத ஞானமுள்ளவராவார்கள். அப்படி ஆகக்கூடாது என்று அவர்களிடத்தில், கருணையினால் பிரபஞ்சத்திற்கு ஸத்யத்வ க்ராஹகப்ரமாணங்கள் வ்யாவஹாரிக ஸத்யத்வத்தையே விஷயீ கரிக்கின்றன. பிரபஞ்சத்திற்கு பாரமார்த்திக ஸத்யத்வத்தை நிஷேதிக்கின்றோம். பிரபஞ்சாபாவத்தை விஷயீகரிக்கும் மதத்திற்கு ஸத்யத்வக்ராஹக ப்ரமாணத்தினால் விரோதமில்லை என்று அத்வைதிகளைப்போல் பௌத்தரும் சொல்லவே, "ப்ரமாணங்கள் அவ்வவைகளின் விஷயங்களை ஸத்ய (தத்வ) மென்றே விஷயீகரிக்கின்றன. வ்யாவஹாரிகமென்று விஷயீகரிப்பதில்லை. பிரபஞ்சாபாவத்தை போதிக்கும் மதத்திற்கு பிரபஞ்சத்தை போதிக்கும் ப்ரமாணத்தினால் விரோதம் வருகிறது. ஆகையால் பிரபஞ்சாபாவம் சர்வப்ரமாணவிருத்தமாகிறது. பிரபஞ்சத்திற்கு ஸத்யத்வத்தை விஷயீகரிக்கும் ப்ரமாணங்களுக்கு வ்யாவஹாரிக ப்ராமாண்யம் என்றால் வ்யாவஹாரிக வஸ்துவை விஷயீகரிப்பது. பிரபஞ்சத்திற்கு நிஷேதத்தைச்சொல்லும் ப்ரமாணங்களுக்கு பாரமார்த்திக ப்ராமாண்யம் என்றால் பாரமார்த்திகநிஷேதத்தை போதிப்பது. இப்படிச்சொல்லி விரோதத்தை பரிஹரிப்பதற்கு வருகிறதில்லை. ஆகையால் பிரபஞ்சாபாவத்தைச்சொல்லுவது மிகவும் துஷ்டமானது" என்று பௌத்தமதநிருகரணவியாஜத்தினால், தாம் சொல்லும் வ்யாவகாரிக பாரமார்த்திக விஷய பேதத்தினால் விரோத பரிகாரம் அயுக்தமானது என்று, ஸஜ்ஜனங்களுக்கு அறிவித்து சங்கராசாரியர் மஹோபகாரத்தைச்செய்திருக்கின்றனர்.

இந்த புத்தஜயந்திதினத்தில் வாசுதேவாவதாரரான புத்தரிடமும், ருத்ராவிஷ்டாவதாரரான சங்கராசாரியரிடமும் க்ரதஞ்ஞதையைப்பாராட்டி நம்முடைய குருவினால் உபதிஷ்டமான தத்வங்களின் உபன்யாசத்தை முடிக்கிறோம்.

दैत्यान्मोहयितुं जगाद भगवान्बुद्धावतारोहरिः
शून्यं / ज्ञानं तत्वमतोमृषान्यदखिलं वेदो न मानंत्विति ।

योग्यान्योजयितुं धिया विमलया नाभाव इत्यादिभि-
स्सूत्रैर्दूषितमातनोत्स्वयमसौ व्यासात्मना तन्मतम् ॥

कांश्चिन्मोहयितुं तदेव च मतं प्रख्यापयन्वैदिकं
रुद्राविष्टतनूरपार्थमवदद्वेदस्य कालांतरे ।

योग्यान्योजयितुं धिया विमलया नाभाव इत्यादिभि-
स्सूत्रैः खण्डितमाह बौद्धदलनव्याजेन तच्छंकरः ॥

ஸ்ரீ புத்த ஜயந்தி,
பிரஜோத்பத்தி ஆஸ்வின
சுத்த நவமி, பௌமவாரம்.
(முகாம்) மதராஸ்.

தர்க்கவித்வான் பண்டிதசிரோமணி
கிருஷ்ணசாரியர்.

I.

He (Sankara) has, I think, tried his level best * *to explain away* even the most obvious references to Buddha and Buddhism in Gaudapada's Karika.

**S. Das Gupta, M.A., Ph.D.**

புத்தரைப்பற்றியும் பௌத்தமதத்தைப்பற்றியும் கௌட பாதகாரிகைகளில் ஸ்பஷ்டதமமாயிருக்கிற சந்தர்ப்பங்களைக்கூட சங்கராசார்யர் சமாதானம் சொல்லுவதுபோல் எதையோ சொல்லிவிடுவதற்கு தம்மால் எவ்வளவு முடியுமோ அவ்வளவும் பிரயத்தினப்பட்டார் என்று நான் நினைக்கிறேன்.

S. தாஸ குப்தா, M.A., Ph.D.

II.

That Gaudapada gives us a Vedantic adaptation of the Buddhist Sunyavada is supported by many scholars, such as Jacobi, Poussin, Sukhtankar and Vidhusekhara Bhattacharya. Unfortunately Sankara * *explains away* all obvious references to Buddhism.

**Sir S. Radhakrishnan, M.A., D. Litt.**

பௌத்தமத சூன்யவாதத்திற்கு கௌடபாதர் வேதாந்த பரிபாஷை (வேதாந்தவேஷம்) கொடுத்திருக்கிறார் என்கிற விஷயம் ஜாகோபி, பௌஸின், ஸுக்டங்கர், விதுசேகர பட்டாசார்யர் முதலான பண்டிதர்களினால் ஆமோதிக்கப்பட்டிருக்கிறது. துரதிருஷ்ட வசத்தினால் பௌத்தமதத்தைப்பற்றின ஸ்பஷ்டமான சந்தர்ப்பங்களெல்லாவற்றையும் சங்கராசார்யர் சமாதானம் சொல்லுகிறதுபோல் எதையோ சொல்லிவிட்டார்.

சர் S. ராதாகிருஷ்ணன், M.A., D. Litt.

---

* The Italics are ours.

இப்புத்தகம் மதராஸ் திருவல்லிக்கேணி சிங்காராசாரி தெருவு, 13 கெம்பர் வீட்டிலிருக்கும் S. ராமாசாரியாரிடம் இனாமாகக்கிடைக்கும்.

திருவல்லிக்கேணி ஹிந்தி பிரசார அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.